# 108 உபநிஷத்துக்களின் சுருக்கம்

(தொகுதி 6)

அ.வெ. சுகவனேச்வரன்

R65,0 12376

19, கண்ணதாசன் சாலை,
தியாகராய நகர்,
சென்னை - 600 017.

**108 UPANISHATHKALIN SURUKKAM PART - VI**
❒ by A.V. SUGAVANESWARAN ❒ First Edition : 2005
❒ Published by ANURAGAM 19, Kannadhasan Salai, T.Nagar Chennai - 600 017. ❒ Typeset by : Sri Sathya Sai Graphics, Chennai - 600 017 ❒ Printed at : Sakthi Printers, Chennai - 600 021.

**விலை** 10·00




6063

45. நாரத பரிவ்ராஜகோபநிஷத், 46. த்ரிசிகிப் பிராம் மணோபநிஷத், 47. ஸீதோபநிஷத், 48. யோக சூடாமணி உபநிஷத், 49. நிர்வாணோபநிஷத், 50. மண்டலப்ராஹ்மணோப நிஷத், 51. தக்ஷிணாமூர்த்தியுபநிஷத், 52. சரபோபநிஷத், 53. ஸ்கந்தோபநிஷத், 54. த்ரிபாத்விபூதி மஹாநாராயணோப நிஷத், 55. அத்வய தாரகோபநிஷத், 56. ஸ்ரீராம பூர்வதாபின்யுபநிஷத், 56. ஸ்ரீ ராமோத்தர தாபின்யுபநிஷத், 57. வாஸுதேவோபநிஷத், 58. முத்கலோபநிஷத், 59. சாண்டில்யோபநிஷத் ஆகிய உபநிஷத்களின் சுருக்கம் இந்த நூல்.

- அநுராகம்

௨௨/5



# 108 உபநிஷத்களின் சுருக்கம்

## தொகுதி 6

## 45. நாரத பரிவ்ராஜகோபநிஷத்

இது அதர்வ வேதத்தைச் சேர்ந்தது. நாற்றிசைகளிலும் சுற்றி வரும் ஸந்நியாசிகளைப் பரிவ்ராஜகர் என்பர். அவர்களில் சிறந்த நாரதர், ஒரு சமயம், முனிவர்கள் நாடும் நைமிசாரண்யத்தை அடைந்தார். ஸனகர் முதலிய மஹரிஷிகள் அவரை வணங்கி முக்தி அடையும் வழியை உபதேசிக்க வேண்டினர். நாரதர் கூறுகிறார்.

''அழியும் பொருள், அழியாப் பொருள் ஆகியவைகளின் பாகுபாட்டைப் பற்றிய அறிவு முதலிய நான்கு வழிமுறைகளைப் பயின்று, ஆசைகளைத் துறந்து ஒருவன் தனது உண்மையான வடிவின் தியானத்தில் நிலை பெற்று, உயிர் நீத்தால் அவன் முக்தி அடைவான்.'' இது முதல் உபதேசம்.

பிறகு முனிவர்களைக் கூட்டிக் கொண்டு நாரதர், பிரம்மாவை அணுகி, ஸந்நியாஸ விதியை உபதேசிக்க வேண்டினார். பிரம்மா கூறலுற்றார். ''ஒருவன் இல்லறத்தை இருபத்தைந்து ஆண்டுகள் முறைப்படி நடத்த வேண்டும். பின் அடுத்த இருபத்தைந்து ஆண்டுகள் காட்டில் தனியே வசித்து, பகல் ஒருவேளை மட்டும் உண்பவனாய், ஆசைகளைத் துறந்து, ஸந்நியாஸத்திற்கு உரிமையடைவான்''. இது இரண்டாவது உபதேசம்.

எல்லாப் பொருள்களிலும் பற்றை விட்ட பிறகு தான் ஒருவன் ஸந்நியாஸத்தை விரும்பலாம். அவன் ஞானத்தை முன்னிட்டுக் கொண்டுதான் ஸந்நியாஸியாக வேண்டும். ஸந்நியாஸ தர்மத்தின் பத்துக் குறிகள் மனோதிடம், பொறுமை, அடக்கம், களவில்லாமை, சுத்தம், புத்தி, கல்வி, வாய்மை, கோபமின்மையாகும். இறந்த கால, நிகழ்கால, எதிர்கால இன்பங்களை எண்ணாதவன் ஸந்நியாஸ ஆசிரமத்திற்குத் தகுதி உள்ளவன். இறந்த பிறகு உடல் இன்ப துன்பங்களை உணராதவாறு உயிருள்ள போதும் ஒருவன் இருந்தால், அவன் ஸந்நியஸாசிரமத்தில் வசிக்கலாம். முறைப்படி ஸந்நியாஸி தனி ஒருவனாக இருக்க வேண்டும். பலர் கூடியிருந்தால், அவர்களுக்கிடையில் அரசாங்கப் பேச்சு எழும் (இது இக்காலத்தில் எவ்வளவு உண்மை!) ஆகையால் துறவி தன்னம் தனியாக யாருடனும் பேசாமல் இருக்க வேண்டும். பிறர் அவனுடன் பேச்சுக் கொடுத்தாலும், அவன் 'நாராயண' என்றுதான் பதில் கூறவேண்டும். அவன் மரணத்தையும் விரும்பக் கூடாது; வாழ்வையும் விரும்பக்கூடாது. உணவு உட்கொள்ளும் பொழுது கூட, அவன், 'இது பிடிக்கும், இது பிடிக்காது' என்று சொல்லக் கூடாது.

உண்மையான பூணூல் பரமபதம். அதை அறிந்தவர்கள் வேதத்தைக் கரை கண்டவர்கள். சடங்குகள் புரிபவன் பூணூலை அணிய வேண்டும். சுவேதகேது, ரிஷி நிதாகர், ரிஷபர், துர்வாசர், ஸம்வர்த்தகர் தத்தாத்ரேயர், ரைவதகர் ஆகியோர் வெளிப்படை அடையாளங்கள் ஏதுமில்லாதவர்கள். அவர்களைப் போல, 'அஹம் பரஹ்மாஸ்மி' (நான்

பிரம்மமாயிருக்கிறேன்) என்ற தியானத்துடன், ஓங்காரத்தை உச்சரித்துக் கொண்டு உயிரை விடுபவன், உடலெடுத்த பயனை அடைகிறான். இது மூன்றாவது உபதேசம்.

உலக விஷயங்களையும், சடங்குகளையும், புலன்கள் சம்பந்தப்பட்டவைகளையும் துறந்து ஆத்மாவில் நிலை பெறுபவன் நற்கதியை அடைகிறான். பெண்களுடன் உரையாடல் கூடாது. தரும காரியங்களை மேற்கொள்ளுதல், பிராயச்சித்தம், அயல்நாடு செல்லுதல், மந்திரம், மருந்து, பிறர்க்கு ஆசி ஆகியவற்றை விலக்க வேண்டும். தானம் வாங்கவும் கூடாது, கொடுக்கவும் கூடாது. மௌனம், யோகாசனம், யோகப் பயிற்சி, பொறுமை, தனிமை, பற்றின்மை, ஸமத்துவம் ஆகிய ஏழும் ஏக தண்டிகள் எனும் துறவிகள் மேற்கொள்ள வேண்டியவை. இங்ஙனம் நாலாவது உபதேசம்.

சடங்குகளைத் துறந்த ஸந்நியாஸி, தனது ஆசிரமத்திற்கு உரிய சடங்குகளை மட்டும் செய்ய வேண்டும் என்பதைப் பற்றி பிரம்மா நாரதருக்கும் மற்றவர்களுக்கும் விளக்குகிறார். ஸந்நியாஸம் ஒன்றே. ஆனால், அக்ஞானத்தாலும், சக்தியின்மையாலும் அவை நான்கு வகைப்படுகின்றன. அவை வைராக்கிய ஸந்நியாஸம், ஞான ஸந்நியாஸம், ஞான வைராக்கிய ஸந்நியாஸம், கர்ம ஸந்நியாஸம் ஆகும். புலன்கள் விஷயத்தில் வைராக்கியம் ஏற்பட்டுத் துறவை ஏற்பவர் வைராக்கிய ஸந்நியாஸி. சாஸ்திர ஞானத்தால் ஸம்ஸாரத்தை முற்றும் துறப்பவன் ஞான ஸந்நியாஸி. ஞானத்தாலும் வைராக்கியத்தாலும் சஞ்சரிப்பவன் ஞான வைராக்கிய ஸந்நியாஸி. பிரம்மசரியம்,

இல்லறம், வானப்பிரஸ்தம் ஆகியவைகளைப் படிப்படியாக முடித்து, ஸந்நியாஸம் மேற்கொள்பவன் கர்ம ஸந்நியாஸி. இங்ஙனம் ஐந்தாவது உபதேசம்.

சொல், செயல், மனம் ஆகிய மூன்றும் எந்த ஸந்நியாஸிக்கு முற்றிலும் அடங்கி, தடிகள் போல, அவனுக்கு உதவுகின்றனவோ அவன் த்ரிதண்டி எனப்படும் சிறந்த ஸந்நியாஸியாவான்.

பரம்பொருளை உணர்ந்தவன் வர்ணாச்ரம தர்மங்களைக் கடக்கிறான். வர்ணாச்சிரமம் முதலியவை மாயையால் உடலில் கற்பிக்கப்பட்டவை. தேவதைகளின் துதியோ, மனிதர்களை வணங்குவதோ, முன்னோர்களை வழிபடுவதோ அவனுக்கில்லை. உலகையே வீடாகக் கொண்டு, தானாகக் கிடைக்கும் உணவில் திருப்தி அடைகிறான் அவன். இங்ஙனம் ஆறாவது உபதேசம்.

பிரம்மா நாரதருக்கு ஸந்நியாஸியின் நியமத்தை விளக்குகிறார். புலன்களை அடக்கி, ஞான வைராக்கியத்துடன் கூடியவனாய் அவன் தன்னையே எங்கும் காண்கிறான்; பிராரப்தங்கள் நாசமாகி, மரணம் அடையும் வரை அப்படியே இருப்பவன் ஜீவன் முக்தனாகிறான். மோக்ஷத்தை விரும்பும் ஸந்நியாஸி, ஸம்ஸாரத்தைக் கடக்கும் தாரக மந்திரமான பிரணவத்தை எப்பொழுதும் தியானித்து, உலக விஷயங்களைத் துறந்து வாழவேண்டும். இது ஏழாவது உபதேசம்.

ஓம் என்ற பிரணவமே பிரம்மம். அகாரம், உகாரம், மகாரம், அர்த மாத்திரை, நாதம், பிந்து, கலை, சக்தி என்று

அது எட்டாகப் பிரியும். விராட் பிரணவம் ஸகுணம், ஸம்ஹாரப் பிரணவம் நிர்க்குணமானது. இரண்டும் இணைந்தது. உற்பத்திப் பிரணவம். ப்ரஹ்மப் பிரணவத் தைத் தான் ஆராய்ந்து அறிய வேண்டும். அந்தத் துரீயம், சூரியன் போல எங்கு பிரகாசிக்கிறது. அது ஸந்நியாஸி களுக்கு ஆதாரமான சுயம் ஜோதி. இது எட்டாவது உபதேசம்.

பிரம்மா நாரதருக்கு ப்ரஹ்மஸ்வரூபத்தை விளக்கு கிறார். அது வேறு நான் வேறு என்று கருதுபவன் மிருகத் திற்கு ஒப்பானவன். இதை அறிந்தவன் மரணத்தின் வாயிலிலிருந்து தப்புகிறான்; வேறு வழி இல்லை. ஆத்ம ஞானம் தவத்தின் மூலம் வருவது. இதயத்தில் வீற்றிருக்கும் ஆத்மாவான ஈசனை, அந்தக்கரணத்தின் தெளிவால், காண வேண்டும். ப்ரஹ்மமே சிவனாகவும், விஷ்ணுவாக வும் பிரம்மாவாகவும் உள்ளான். தன் வயிற்றில் பூவுல கைத் தாங்குபவனும் அவனே. எவன் அப்பாலுக்கும் அப்பாலனவனோ, பெரிதிற்கும் பெரியவனோ, ஒளி மயமானவனும், என்றும் உள்ளவனாகவும், மங்கள வடிவானவனும் ஆக இருக்கிறானோ அவன் தான் பிரம்மம். உள்ளுணர்வும், வெளி உணர்வும் அற்று, ஞானமும் அக்ஞானமும் அற்று, தான் தானாகவே இருப்பவன் பிரம்மம் என்று அறிபவன் முக்தன். அந்நிலைதான் விஷ்ணுவின் பரமபதம் எனப்படுவது. அதை அடைந்த யோகிகள் திரும்புவதில்லை. இங்ஙனம் ஒன்பதாவது உபதேசம்.

# 46. த்ரிசிகிப் பிராம்மணோபநிஷத்

இது சுக்ல யஜுர் வேதத்தைச் சேர்ந்தது. த்ரிசிகிப் பிராம்மணர் என்பவர் சூரியனிடம் உடல், பிராணன், காரணம், ஆத்மா இவைகளைப் பற்றிய விளக்கங்களைக் கேட்டார். சூரிய பகவான் கூறுகிறார்: இது எல்லாமே சிவன் என்று உணர வேண்டும். ஏனெனில் நித்திய சுத்தனாகவும், மாசற்றவனாகவும், எங்கும் நிறைந்த இரண்டற்றவனாகவும் உள்ளவன் சிவன் ஒருவனே; தனது ஒளியால், அனைத்தையும் படைத்து, ஒரே அக்கினி இரும்புத் துண்டுகளில் வெவ்வேறு வடிவில் தோன்றுவது போல, அவன் ஒருவனே வெவ்வேறு வடிவில் தோன்றுகிறான். அவனால் பிரகாசிக்கப்படுவது எது எனின் ஸத் எனும் சொல்லால் குறிக்கப்படுவதும், மாயையுடன் கூடியதுமான பிரம்மம்.

தன்னுடைய பிராண சக்திகளை தலைக்கேற்றி ஸ்திரமாக யோகாப்பியாஸம் செய்யும் பொழுது, யோகத்தால் ஞானம் உண்டாகிறது. ஞானத்தால் யோகம் வளர்கிறது. யோகமும் ஞானமும் நிலைத்த பின் யோகி அழிய மாட்டான். மாறுதல்களிலுள்ள சிவனைக் காண்பான். சிவனில் மாறுதலைக் காணமாட்டான். கூரான கத்திமுனையால் வெட்டுவது போல, யோகி, யோகத்திற்குத் தடைகளை வெட்டித் தள்ள வேண்டும்.

பரம்பொருளைக், காற்றில்லாத இடத்தில் தீபம் போன்றவனை, சாணை பிடிக்காத ரத்தினத்தின் ஒளி

போன்றவனைத் தியானம் செய்யும் யோகிக்கு முக்தி உள்ளங்கையில் உளதாகும். இவ்வாறு தத்துவங்களை ஆராய்ந்து, பற்றற்ற மனம் படைத்தவன் விறகில்லாத நெருப்பு போலத் தன்னிடமே ஒடுங்குகிறான். மனமும் பிராணனும் பற்றுவதற்கு ஏதுமில்லாத நிலையில், நிச்சய வடிவான ஞானத்தில் நிலைத்து, ஜீவன், உப்புக்கட்டி போல, சுத்த ஸத்வக் கடலில் கரைந்து போகிறான்.

## 47. ஸீதோபநிஷத்

இது அதர்வ வேதத்தைச் சேர்ந்தது. பிரம்மா தேவர்களுக்கு ஸீதையின் உருவத்தை விளக்குகிறார். மூலப் பிரகிருதி வடிவால் ஸீதை பிரகிருதி எனப்படுகிறாள். கண்களுக்குப் புலப்படாத மஹா மாயை வெளிப்படையாக ஸீதையாகத் தோன்றுகிறாள். ஸ்ரீ ராம ஸாந்நித்திய வசத்தால், அவள் உலகிற்கு ஆனந்தமளிப்பவள்; எல்லாப் பிராணி களுக்கும் படைத்தல், காத்தல், அழித்தல் முதலியவை களைச் செய்பவள்.

அந்தத் தேவி மூன்று வடிவினள் ஆகிறாள்; இச்சா சக்தி, கிரியா சக்தி, ஸாக்ஷாச் சக்தி. இச்சா சக்தி மீண்டும் மூன்று விதமாக, ஸ்ரீ-பூமி-நீளா வடிவினளாக உள்ளாள். ஸ்ரீ தேவி உலகை ரக்ஷிக்கிறாள். பூ தேவி பிரபஞ்சத்திற்கு ஆதாரமாகப் பிரணவ வடிவாக உள்ளாள். நீளாதேவி மின்னல் சக்தி வடிவினளாய் எல்லாச் செடி கொடிகளுக்கும் எல்லாப் பிராணிகளுக்கும் உணவுச் சத்தாகப் பற்பல உருவங்களை

ஏற்கிறாள். கிரியாசக்தி ஹரியின் முகத்திலிருந்து எழுந்த நாதம். இறைவனுடைய ஸாக்ஷாச் சக்தி நினைத்த மாத்திரத்தில் தோன்றுபவள். அடக்கவும் அருளவும் வல்லவள்; சாந்தி வடிவினள்; தேஜோ வடிவினள். எல்லா சக்திகளும் உள்ளவளாக விளங்குவதால், ஸாக்ஷாச் சக்தி எனப்படுகிறாள்.

மூன்று விதமாக உள்ள இச்சா சக்தி, பிரளய காலத்தில், இளைப்பாறுவதற்காக, பகவானுடைய வலது மார்பில் ஸ்ரீ வத்ஸம் என்ற மருவாகி, யோக சக்தியால், உறைகிறாள். போக சக்தியாகும் பொழுது, கற்பக விருக்ஷம், காமதேனு, சிந்தாமணி முதலியவைகளுக்கு இருப்பிடமாகி, பக்தர்களுக்கு அனைத்தையும் அருளுகிறாள்.

வீரசக்தி நான்கு கைகளிலும் அபயம், வரத முத்திரைகளையும், தாமரைகளையும் ஏந்தியவளாய், கற்பக விருக்ஷத்திற் கடியில், எட்டு ஐசுவரியங்களுடன் கூடியவளாய், திவ்ய ஸிம்ஹாஸனத்தில் விளங்கும் தேவி. அவள்தான் வீரலக்ஷ்மி.

## 48. யோக சூடாமணி உபநிஷத்

இது ஸாமவேதத்தைச் சேர்ந்தது. சூடாமணி என்ற ஸமஸ்கிருதச் சொல்லிற்கு ஜடை பில்லை (பெண்கள் முடியில் திருகி அணியும் கற்கள் பதிக்கப்பட்ட வட்டவடிவமான ஆபரணம்) என்று பொருள். ஆக, யோக சூடாமணி உபநிஷத் என்றால், சிகரத்தைப் போல, உச்சியில் விளங்கும், யோகத்தைப் பற்றிய உபநிஷத் என்று கொள்ளலாம்.

மேலும் கீழும் செல்லும் மூச்சுக் காற்றுக்கு வசமானவன் ஜீவாத்மா. ஒன்றதை மற்றது இழுக்கிறது. மேலும் கீழுமிருக்கும் இவ்விரண்டையும் அறிபவன் யோகத்தை அறிகிறான். மூச்சுக்காற்று ஹகாரத்துடன் வெளியே செல்லுகிறது. ஸகாரத்துடன் மீண்டும் உள்ளே புகுகிறது. ஹம்ஸ: எனும் இந்த மந்திரத்தை ஜீவன் எப்பொழுதும் ஜபிக்கிறான். அஜபாகாயத்ரீ எனும் இது எல்லா யோகி களுக்கும் மோக்ஷத்தை அளிக்கும். இதற்குச் சமமான வழிபாடோ, ஜபமோ, ஞானமோ இல்லை.

குண்டலினியிலிருந்து எழும் இந்த அஜபாகாயத்ரீ பிராணனைத் தாங்குகிறது. வீட்டின் கதவைச் சாவியால் திறப்பது போல, யோகி மோக்ஷத்தின் வாயிலைக் குண்டலினி யால் திறக்க வேண்டும்.

என்றும் உளதும், சுத்தமானதும், அறிவு மயமானதும் உள்ளது பரம்பொருள்; அதை வர்ணிக்க முடியாது; ஆதியந்த மற்றது; அது ஒன்றேயாகியது; துரீயம் எனப்படுவது; அதிலிருந்து எழுந்தது பராசக்தி; அதிலிருந்து படைப்பு உண்டாயிற்று.

ஓங்கார வடிவான ஆத்மா, எப்பொழுதும், எல்லா ஜீவர்களிடமும், இன்பங்களை அனுபவிக்கும் காலத்தில், கீழ்நோக்கி இருக்கும். தாரையாகக் கீழே விழும் எண்ணெயைப் போலவும், நீண்ட மணி ஓசை போலவும், பிரணவ நாதம், இடையறாது, தொடர்ந்து இருக்கும். அதன் முடியே பிரம்மம் எனப்படும். அந்த முடி, சொல்லுக் கெட்டாத, ஒளிமயமாக இருக்கும்.

விழிப்பு நிலையில் இரண்டு கண்களின் நடுவில் ஹம்ஸ மந்திரம் பிரகாசிக்கிறது. ஸகாரம் 'தத்வமஸி' மந்திரத்தில் 'த்வம்' ஆகவும், ஹகாரம் தத் எனும் பரமேசுவரனாகவும் நிச்சயிக்கப்பட்டுள்ளது. ஸகாரம், பிறந்திறந்து அவையும் ஜீவாத்மா என்றும், ஹகாரம் நிலையான ஈசுவரன் என்றும் யோகி தியானிக்க வேண்டும்.

சொல்லால் அதை எப்பொழுதும் உச்சரிக்க வேண்டும். உடலால் அதை அப்பியசிக்க வேண்டும். அது பரஞ்ஜோதியான ஓம். சுத்தமாயிருந்தாலும், அசுத்தமா யிருந்தாலும், பிரணவத்தை ஜபிப்பவன், தாமரை இலை யில் தண்ணீர் ஒட்டாதவாறு, பாவங்களால் பற்றப்பட மாட்டான்.

ஆஸனம் நோயைத் தடுக்கிறது; பிராணாயாமம் பாவங்களை ஒழிக்கிறது; பிரத்யாஹாரம் மனதின் மாறுதல் களைப் போக்குகிறது. தாரணையில் மனம் திடப்படுகிறது; ஸமாதியில் யோகி மோக்ஷத்தை அடைகிறான். ஸமாதியில் அளவற்றதும், எங்கும் பரந்ததுமான பரஞ்ஜோதியைத் தரிசித்த பின்னர், அவனுக்குச் சடங்கும், செயலும், வருதலும், போதலும் இல்லை. கண் முதலிய புலன்கள் வெளி விஷயங்களில் சஞ்சரிப்பதைத் தடுத்து, உள் முகமாக்குதல் பிரத்யாஹாரம் எனப்படும். சூரியன் மாலை யில் ஒளியை உள்ளே வாங்கிக் கொள்வது போல, யோகி பயிற்சியின் மூன்றாவது நிலையில் மனதின் மாற்றங்களை அடக்குகிறான்.

# 49. நிர்வாணோபநிஷத்

இது ரிக் வேதத்தைச் சேர்ந்தது. மோக்ஷம் எனப் பொருள் படும். நிர்வாணத்தை அடையும் வழியை இந்த உபநிஷத் கூறுவதால் இதற்கு இப்பெயர் வந்தது. ஸந்நியாஸிகளுடைய சித்தாந்தம் ஆகாயத்தைப் போல எங்கும் ஸமமாகவும், பற்றுதலில்லாமலும் இருப்பது. அவர்களுடைய வாழ்க்கை ஆத்மானந்தம் பெருகியோடும் ஆறு போன்றது. சந்தேகங்களற்ற நிச்சய புத்தியை அவர்கள் போற்றுகிறார்கள். மோக்ஷமே அவர்களுடைய குறிக்கோள். தனிமையை அவர்கள் விரும்புகிறார்கள். அவர்களுடைய ஞானம் வரம்புகளற்றது. பற்றின்மையை மேற்கொண்டு அவர்கள் பிரம்மத்தை உபதேசிக்கிறார்கள்.

விவேகத்தையும் கருணையையும் மேற்கொண்டு அவர்கள், ஏகாந்தமாகிய குகையில் இன்பமாக வாழ்கிறார் கள். எதிர்பாராமல், வேண்டுதலில்லாமல் கிடைக்கும் உணவையே அவர்கள் உண்கிறார்கள். எல்லா உயிர்களிலும் உறையும் பரம்பொருளே தான் என்பது அவர்களுடைய வழிபாடு. தைரியத்தை மேற்கொண்டு அவர்கள் எப்பொழுதும் ஞானத்தைப்பற்றிய சிந்தனையில் ஆழ்கிறார்கள். அவர்கள் செல்வத்தைக் காலணி போலக் கீழாகக் கருதுகிறார்கள்; குண்டலினீ சக்தியைத் தன் வயப்படுத்தியவர்கள். மற்றவர் களைக் குறித்து அவர்கள் அவதூறு ஏதும் பேசமாட்டார்கள்.

முக்குணங்களையும் கடந்த அவர்களுடைய நிலை மனதிற்கும், வாக்குக்கும் எட்டாமல், விவேகத்தால்

மட்டும் அடையக் கூடியது. கனவுலகைப் போலும், மேகத்தில் தோன்றும் யானை போலும், இந்த உலகம் அநித்தியம் என அவர்கள் கருதுகிறார்கள். அவ்வாறே மதி மயக்கத்தால் கயிற்றைப் பாம்பு என்று காண்பது போல, உடல் முதலானவற்றைக் கற்பனையால் ஏற்பட்டவை என அவர்கள் எண்ணுகிறார்கள்.

ஸகுணப் பிரம்மமாகிய விஷ்ணு, பிரம்மா முதலியவர் களின் முடிவான லக்ஷியம் நிர்க்குணப்பிரம்மம். யானைப் பாகன் யானையை அங்குசத்தால் அடக்கு வது போல, புலன்களை அறிவால் அடக்குதல் யோக மார்க்கம்.

சூனியம் என்பது கணிதத்திலுள்ள குறி மட்டுமன்று, பரமேச்வரனின் உண்மை வடிவம். ஸோஹம் என்று மூச்சுடன் நிகழும் அஜபா காயத்ரீ தான் ஸந்நியாஸியுடைய ஜபம். அதனால் அவன் மனம் லயமடைகிறது. இரண்டற்ற இன்பக் கடலில் அவன் மூழ்குகிறான்; மனதை அடக்கு தலையே அவன் நியமமாகக் கொள்கிறான்; மாயை, தான், தன்னுடையது என்ற எண்ணங்களை அவன் ஒழிக்கிறான்;

தான் தானாக இருக்கும் நிலையே மோக்ஷம். அதுவே பிரம்மம். ஆற்றில் படகு ஊர்ந்து செல்வது போல, அவன் பற்றில்லாமல் செயல்படுகிறான். பிரம்மசரியத்தையும், சாந்தியையும் கைக்கொண்டு அவன் வாழ்க்கையை நடத்துகிறான். முடிவில் பிளவில்லாத பிரம்மத்தை அடைகிறான்.

திருமூலர் பாடுகிறார்:

அந்நெறி இந்நெறி என்னாது அட்டாங்க
தந்நெறி சென்று, சமாதியில் நின்மின்;
நன்னெறி செல்வார்க்கு ஞானத்தில் ஏகலாம்
புல்நெறி ஆகத்தில் போக்கு இல்லை ஆகுமே.

*- திருமந்திரம் 551*

**பொருள்:** இறைவனை அடைவதற்கு அது வழி, இது வழி என்று எண்ணித் தடுமாறாது அட்டாங்க யோக நெறியில் நின்று சமாதியை அடையுங்கள். அங்ஙனம் அந்த நெறியில் போய்ப் பொருந்தியவர்க்கு ஞான யோகம் வாய்த்துச் சிவப்பேறு பெறலாம். அங்ஙனம் ஞானம் கை - கூடாது போயினும், பிறவிக்கு வரும் நெறியில் வந்து ஓர் உடலில் பொருந்துவது இல்லையாகும்.

## 50. மண்டலப்ராஹ்மணோபநிஷத்

இது சுக்ல யஜுர் வேதத்தைச் சேர்ந்தது. இது சூரியன் யாக்ஞவல்கிய மஹரிஷிக்கு ஆத்ம தத்துவத்தை உபதேசம் செய்ததாக அமைந்துள்ளது. ஒரு குறிப்பிட்ட பாதையில் (மண்டலத்தில்) சூரியன் சஞ்சரிப்பதால் அவன் மண்டல புருஷன் எனப்படுகிறான். சூரியனுடைய உபதேசம் ஐந்து பிராம்மணங்கள் (பகுதிகள்) கொண்டதாக உளது. ஆக, இந்த உபநிஷத் இப்பெயரைப் பெற்றது.

ஞானத்துடன் கூடிய யமம் முதலிய ஸாதனங்கள் யோகம் எனப்படும். குளிர், வெப்பம், உணவு, உறக்கம்

ஆகியவற்றை வென்று, எப்பொழுதும் சாந்தமாகப் புலன் களை அடக்கியிருத்தல் யமம்.

குருபக்தி, மெய் வழியில் பற்று, திருப்தி, பற்றின்மை, தனிமை, செயல்களின் பலன்களில் ஆசையின்மை, வைராக்கியம் ஆகியவை நியமங்கள். விதித்த கணக்குப்படி மூச்சை உள்ளே இழுத்தலும், அடக்குதலும், வெளியே விடுவதும் பிராணாயாமம். புலன்களை நாடிச் செல்லும் மனதை அடக்குதல் பிரத்யாஹாரம். எல்லா உடல்களிலும் உறையும் உயிர் ஒன்றே என்று எண்ணி இருப்பது தியானம். வெளி விஷயங்களிலிருந்து மனதைத் திருப்பி, அதை உள்ளுறையும் பரம்பொருளில் நிறுத்துதல் தாரணை. தியானத்தில் மெய் மறந்த நிலை ஸமாதி. இங்ஙனம் அறிபவன் முக்திக்குத் தகுதி அடைகிறான்.

மனதில் ஆசைகள் உதிப்பதே பந்தத்திற்குக் காரணம்; அதில்லாத மனம் மோக்ஷத்திற்கு வழி வகுக்கிறது. ஆசைகளற்றவன் உலகனைத்தும் ஆத்மாவாகவே காண் கிறான்; 'நான் பிரம்மம்' என்றும் இது எல்லாம் ஆத்மாவே என்றும் கண்டனுபவிக்கிறான்; இப்படியாக, அவன் பிறவிப் பயனை எய்துகிறான். இவ்வாறு ஆனந்தமடை கிறவன் பரம யோகி.

பால் கறவை நின்றபின் பசுவின் மடியில் பால் சுரக்காதது போலும், புலன்களின் செயல்களெல்லாம் மறைந்து போகும் பொழுது, மனதின் சஞ்சலங்களுக்கு அழிவு ஏற்படுகிறது. பிரம்மமே தான், தானே பிரம்மம்

எனக் கண்டு முடிவற்ற முழுமையை அடைந்து, யோகி பிறவிப் பயனை அடைகிறான்.

உலகம் முழுவதும் சித்தத்தில் அடங்கும். அதே சித்தம், பற்று நீங்கினால் பக்குவமடைந்து, லயமடையத் தகுதி பெறுகிறது. அந்த லயத்தை முழுவதுமாகச் சூரியனிடத்தில் நிறுத்திப் பழக வேண்டும்.

உலகில் ஓயாமல் உச்சரித்துக் கொண்டிருக்கும் இயற்கையின் ஓசை அனாஹதத் த்வனி எனப்படும். அந்த அனாஹதத்வனியில் ஒரு ஜோதியும், அதனுள் மனதும் உள்ளது. அது படைத்தல் காத்தல் அழித்தல் முதலிய செயல்களைப் புரிகிறது. அந்த மனது லயமானால் அதுதான் விஷ்ணுவின் பரமபதம்.

மாணிக்கவாசகப் பெருமாள் திருவாசகத்தில் பாடுகிறார்.

**நல்மணி நாதம் முழங்கி என்**
**உள்உற நன்னுவது ஆகாதே.**

*- திருப்படை ஆட்சி 49/4*

பொருள்: யோகாசனம் புரிபவர்கள் தங்கள் உடலினுள்ளே கேட்கின்ற அனாஹதத்வனி எனும் இனிய ஓசையானது நிகர்விகல்ப ஸமாதியினரால் கேட்கப்பட மாட்டாது.

அந்த லயமடைவதால் வேறுபாடுகள் மறைகின்றன. இதுதான் சுத்தாத்வைத சித்தி எனும் முழுமையான இரண்டற்ற தத்துவம். நீண்ட கால ஸமாதிக்குப் பின் அவன் பரமஹம்ஸன் எனப்படுகிறான்.

# 51. தக்ஷிணாமூர்த்தியுபநிஷத்

இது கிருஷ்ண யஜுர் வேதத்தைச் சேர்ந்தது. ஒரு ஆலமரத்தடியில், பெரியதொரு வேள்விக்காகக் கூடியிருந்த மஹரிஷிகளுக்கு மார்க்கண்டேயர், தான் எவ்வாறு சிரஞ்சீவியாகவும் ஆனந்தமாகவும் இருக்கிறார் என்பதை விளக்குகிறார். அப்பொழுது, அவர் தக்ஷிணாமூர்த்தியான சிவனைப் புலன்களால் கண்டறியக்கூடிய சிவதத்துவ ஞானத்தை அந்த மஹரிஷிகளுக்குக் கூறியதால், இந்த உபநிஷத் இப் பெயரைப் பெற்றது.

மார்க்கண்டேயர் தக்ஷிணாமூர்த்தியைப் பற்றிய மந்திரங்களையும், வழிபடும் முறையையும் மஹரிஷிகளுக்கு விவரமாக விளக்கினார்.

**தியானம்:** படிகம் போல் வெண்மையானவரும் கைகளில் முத்துமாலை, வித்தை வடிவான அமிர்த கலசம் ஞானமுத்திரை இவைகளுடன் கூடியவரும் பாம்பை உடலைச் சுற்றிப் போட்டிருப்பவரும், சந்திரனைத் தலையில் சூடிக் கொண்டிருப்பவரும், முக்கண்ணரும், பல நகைகளுடன் கூடியவரும் ஆன தக்ஷிணாமூர்த்தியைப் போற்றுகிறேன்.

மங்களங்களையருளும் அபய முத்திரையும், மானும், பரசும் மூன்று கைகளில் ஏந்தி, ஒரு கையை முழந்தாள் மேல் வைத்துக் கயிறு போல் பாம்பைக் கட்டிக் கொண்டு, சடையில் சந்திர கலையுடன், பால் போல் வெண்மையாகப் பிரகாசிப்பவரும், ஆலமரத்தடியில் அமர்ந்திருப்பவரும்,

சுகர் முதலிய முனிவர்களால் சூழப்பட்டவரும், ஆன முக்கண்ணன் நமக்கு மனத்தெளிவை அருளட்டும்.

வைராக்கியமாகிற எண்ணெய் நிறைந்ததும், பக்தி எனும் திரியுடன் கூடியதும் முழுமையான விழிப்பு எனும் பாத்திரத்தில் ஒளிரும் ஞான தீபத்தைக் காண வேண்டும். படைப்புக்கு முன், பிரம்மா இந்தத் தக்ஷிணாமூர்த்தியை வழிபட்டுப் படைக்கும் திறனை அடைந்து மகிழ்ந்தார்.

## 52. சரபோபநிஷத்

இது அதர்வ வேதத்தைச் சேர்ந்தது. பிரம்மா பிப்பலாதர் எனும் மஹரிஷிக்கு உபதேசித்ததாக இது உள்ளது. பிரபுவும், சிறந்தவரும், உலகப் பிதாவும், மஹேச்வரரும், பிரம்மாவைப் படைத்தவரும், அவருக்கு முதலில் எல்லா தேவர்களுக்கும் தகப்பனும், முடிவு காலத்தில் எல்லா உலகங்களையும் அழிப்பவருமான அந்தத் தேவரை வணங்குகிறேன்.

அவர் கோரமான சரப வடிவம் கொண்டு லோகத்தை அழித்த நரசிம்ஹரை வதைத்தார். (இதனால் இந்த உபநிஷத் இப்பெயரை அடைந்தது.) தோலாடை உடுத்த மஹாவீர ரான அவர் வீரபத்திரர் ஆனார். பிரம்மாவின் ஐந்தாவது முகத்தை அறிந்த ருத்திரனுக்கு நமஸ்காரம். இடது காலால் யமனை வீழ்த்தியவரும், எரியும் ஹாலஹால விஷத்தைப் பருகியவருமான ருத்திரனுக்கு நமஸ்காரம்.

விஷ்ணுவின் கண்ணாகிய மலரால் இடது பாதம் அர்ச்சிக்கப்பட்டு, மகிழ்ச்சியால் விஷ்ணுவிற்குச் சக்ராயுதம் அளித்த ருத்திரனுக்கு நமஸ்காரம்.

'சரா:' எனும் ஜீவர்களுடைய உடல்களில் பிரம்மமே யாகிய விஷ்ணு 'பாதி' பிரகாசிக்கிறார். அதுவே சரபம் எனப் பெயர் படைத்தது. அதுவே மோக்ஷத்தை அளிக்கும்.

## 53. ஸ்கந்தோபநிஷத்

இது கிருஷ்ணயஜுர் வேதத்தைச் சேர்ந்தது. இப்பெயர் வந்ததற்குக் காரணத்தை உபநிஷத் கூறவில்லை. முருகப் பெருமாள் தந்தையைக் குறித்துச் செய்த துதியாக இருக்க லாம் என்று உபநிஷத்தின் பெயரிலிருந்து தோன்றுகிறது.

மகாதேவா! உமது கருணையின் ஒரு நுனியால், நான் நழுவாத நிலையை அடைந்து, சிவமாகி விட்டேன். மனம் எங்கும் பரவுவதால், நிஜம் நிஜமாகத் தோன்றவில்லை. இந்தப் பரவுதலை நிறுத்தினால், அந்த நிஜவடிவம் அறிவு மயமாக, ஹரியாக விளங்கும்.

ஜீவன் சிவனே. சிவனே ஜீவன். உமியால் கட்டப் பட்டது நெல்; உமி நீங்கினால் அரிசி. அவ்வாறு கட்டுப் பட்டவன் ஜீவன்; கர்மமழிந்தால் ஸதா சிவன். பாசத்தால் கட்டுண்டவன் ஜீவன். பாசத்தினின்று விடுபட்டால் ஸதாசிவன்.

விஷ்ணு ரூபியான சிவனுக்கு, சிவ ரூபியான விஷ்ணுவிற்கு நமஸ்காரம்; சிவனுடைய இதயம் விஷ்ணு;

விஷ்ணுவினுடைய இதயம் சிவன். எப்படி விஷ்ணு சிவமயமோ அப்படியே சிவனும் விஷ்ணும்யம். வேறு பாட்டை நான் காணாமையால், எனக்கு ஆயுள் முழுவதும் மங்களம். ஜீவனுக்கும் சிவனுக்கும் வேறுபாடின்மையால், ஜீவனே சிவன் என்றும், உடலே கோயில் என்றும் கூறப்படுகிறது. அக்ஞானமாகிய பழைய பூவை நீக்கி, அவனே நான் என்று எண்ணிப் பூஜை செய்ய வேண்டும்.

வேற்றுமைகளில்லாது எல்லாவற்றையும் நோக்குவது ஞானம்; விஷயமற்ற மனம் தியானம்; மனதின் அழுக்கு களைக் களைதல் ஸ்நானம். புலன்களின் அடக்கம் தூய்மை. பிரம்மானந்தமாகிய அமிர்தத்தைக் குடி; உடலைக் காக்கப் பிச்சையெடுத்துப் புசி; தனிமையில் வசி; இப்படி இருக்கும் புத்திசாலி மோக்ஷத்தை அடைகிறான்.

எப்பொழுதும் ஞானிகள், விண்ணின் கண் போலப் பதிந்துள்ள அந்த விஷ்ணுவின் பரம பதத்தைக் காண் கிறார்கள்.

## 54. த்ரிபாத்விபூதி மஹாநாராயணோபநிஷத்

இது அதர்வ வேதத்தைச் சேர்ந்தது. எங்கும் ஊடுருவி யுள்ள மஹா விஷ்ணுவை அடைய மூன்று வழிகளை இவ்வுபநிஷத் கூறுவதால் இதற்கு இப்பெயர் வந்தது. மஹா விஷ்ணு பிரம்மாவிற்கு உபதேசம் செய்வதாக இந்த உபநிஷத் அமைந்துள்ளது.

பிரம்மம் முக்காலத்தாலும் பாதிக்கப்படாதது; அது ஸகுணமாயும் நிர்க்குணமாயும் உளது; இது எல்லாமே

பிரம்மம்; இரண்டற்றதாகச் சொல்ல முடியாததாக உள்ளது; பிரணவம் முதலிய எல்லா மந்திரங்களின் வடிவாயிருப்பதும் பிரம்மம்.

அவனே துரியப் பிரம்மம்; அவனே துரீயாதீதப் பிரம்மம்; அவனே விஷ்ணு; அவனே பரமேச்வரன்; ஆத்மா, அந்தராத்மா, பரமாத்மா, ஞானாத்மா, துரீயாத்மா முதலிய சொற்களின் பொருளாக விளங்குபவன். இரண்டற்ற பரமானந்தப் பொருள் நாராயணன் ஒருவனே. இப்படி அறிந்த புருஷன், அவனை வழிபடுவதால், அவனுடன் ஸாயுஜ்ஜியத்தை அடைகிறான்.

பரப்பிரம்மத்திற்கு உருவம் உண்டு என்பதும், உருவம் இல்லை என்பதும் முரண்பாடு. அப்படி ஒவ்வாதது எப்படிப் பொருந்தும்? சீடனுடைய இந்தக் கேள்விக்குக் குரு பதில் அளிக்கிறார். இரண்டற்ற உருவற்ற பரப்பிரம்மமே உருவமுள்ள ராமாவதாரம், கிருஷ்ணாவதாரம் முதலியவை களை எடுக்கிறது. உண்மையில் பரப்பிரம்மத்திற்கு உருவ மில்லை எனில், ஆகாயத்தைப் போல, அதற்கு ஜடத்தன்மை கற்பிக்கப்பட்டதாகும். ஆக, பரப்பிரம்மத்திற்கு உரு, அரு என்ற இருநிலைகளும் உண்டு.

இந்தப் பிரபஞ்சமெல்லாம் நித்தியமா, அநித்தியமா என்ற சந்தேகம் எழுகிறது. பிரம்மம் இரண்டற்ற ஒன்றே. பலவாறாகக் காணும் எதுவும் இங்கில்லவே இல்லை. ஆகையால் பிரம்மத்திற்குப் புறம்பாகத் தோன்றும் அனைத்தும் பாதிக்கப்படும். பரப்பிரம்மமே ஸத்யம். பிரம்மம் ஸத்யம், ஞானம், அனந்தம்.

நாராயணனுக்குக் கண்ணை மூடித் திறப்பது எங்ஙனம் என்ற கேள்விக்குக் குரு பதில் அளிக்கிறார். உள் நோக்குடன் தன் வடிவைச் சிந்தித்தல் கண்ணை மூடுவதாகும். வெளி நோக்குடன் தன் வடிவைச் சிந்தித்தல் கண்ணைத் திறப்ப தாகும்.

ஜீவன் காரிய வரம்புடன் கூடியவன். ஈசுவரன் காரண வரம்புடன் கூடியவன். ஈசுவரனுடைய கட்டளைப்படி நடப்பது மஹா மாயை. விஷ்ணுவை வழிபடும் ஜீவன் இந்த மஹாமாயையைக் கடக்கிறான். நாராயணன், தானே யாகிய மாயையுடன், தன் விருப்பப்படி விளையாடுகிறார். மாயைக்கு வசப்பட்ட ஜீவர்கள் ஸம்ஸார ஸாகரத்தில் சுழலுகிறார்கள்.

ஸம்ஸாரத்தைக் கடப்பது எப்படி என்று குரு கூறுகிறார். நல்ல ஒழுக்கத்தால் பாவம் தேய்கிறது. அதனால் உண்மை சுத்தியடைகிறது. பிறகு திடமான ஸாத்விக வாசனையால் பக்தி உண்டாகிறது. பக்தியின் மேம்பாட்டால் நாராயணன் பிரகாசிக்கிறார். ஹம்ஸமந்திரத்தை ஜபித்துப் பிரணவத் தியானத்துடன் பரமானந்த மெய்துகிறான்.

மனதிற்கும் வாக்கிற்கும் எட்டாதது ஆதி விராட் ஸ்வரூபம். வழிபடுபவன் அதற்கும் மேலே போய், போதானந்த வைகுண்டத்தில் நுழைகிறான். ஆதி நாராயணன் அவனைத் தன்னுடைய ஸிம்ஹாஸனத்தில் அமர்த்தி, அபிஷேகம் செய்து மோக்ஷஸாம்ராஜ்ய பட்டாபிஷேகம் செய்விக்கிறார். 'நீயே நான், நானே நீ. நமக்குள் பேதமில்லை' என்று கூறி மறைகிறார்.

பிறகு உபநிஷத் ஸுதர்சன மஹா யந்திரத்தை உபதேசிக்கிறது; இதை முறைப்படி பூஜித்தால் ஸாயுஜ்ய முக்தி கிட்டும். இதற்கப்பால், துரீயம், துரீயாதீதம், ஆதிநாராயண ஸ்வரூபம் என்று கூறி மஹாவிஷ்ணு பிரம்மாவிற்கு உபதேசத்தை முடிக்கிறார்.

## 55. அத்வய தாரகோபநிஷத்

இது சுக்ல யஜுர் வேதத்தைச் சேர்ந்தது. பிறப்பு, இறப்பு எனும் இரட்டைகள், அது தொடர்பான கர்ப்பவாஸம், மூப்பு, பிணி முதலிய ஸம்ஸார பயங்களிலிருந்து எது தாண்டுவிக்கிறதோ (தாரயதி), அது தாரகம் எனப்படுகிறது. அதற்கான வழியை இவ்வுபநிஷத் கூறுவதால் இதற்கு இப்பெயர் வந்தது.

ஜீவன், ஈசுவர் என்று இரண்டாகத் தோன்றுவது மாயை என்று உணர வேண்டும்; எல்லா வேறுபாடுகளையும் இல்லை, இல்லை (நேதி, நேதி) என்று தள்ளிவிட வேண்டும்; பிறகு எஞ்சுவது அத்வயப்ரம்மம்.

உடலின் மத்தியில் ஸுஷும்னா நாடியின் நடுவில் கோடி மின்னல் ஒளியுள்ள குண்டலினியைக் காண்பவன் முக்தியை எய்துகிறான். நெற்றியில், தாரக யோகத்தின் மலர்ச்சியால், இடைவிடாது ஒளியைக் காண்பவன் ஸித்தியடைகிறான். தலைக்குமேல் ஆகாயத்தில் ஒளியைக் காண்பவன் யோகியாவான்.

தாரக யோகத்தில் மனக் கண்ணால் தான் தஹராகாசம் முதலியவைகளை யோகி அறிகிறான். வேதம் கற்றவராக

வும், விஷ்ணு பக்தராகவும், பொறாமையற்றவராகவும், எப்பொழுதும் யோக வடிவினராகவும் உள்ள ஆசாரீயர் ஒருமுறை ஆசீர்வதித்தால், பிறவித்தளை விடுபடும். அந்த நொடியிலேயே, முற்பிறவிகளில் செய்த பாவங்கள் எல்லாம் அழிந்து போகும். எல்லா லக்ஷியங்களும் கை கூடும்.

## 56. ஸ்ரீராம பூர்வதாபின்யுபநிஷத்

இது அதர்வ வேதத்தைச் சேர்ந்தது. பரம்பொருளை ஸகுண உருவமான ஸ்ரீராமராக வழிபடும்படி இது கூறுகிறது. நடத்தையால் தர்ம மார்க்கத்தையும், நாமத்தால் ஞான மார்க்கத்தையும் காட்டுகிறார் அவர்; தன்னைத் தியானிப்பவர்களுக்கும் வழிபடுபவர்களுக்கும் வைராக்கியத்தையும் ஐசுவரியத்தையும் அவர் அளிக்கிறார்: இப்படியாக ராமன் எனும் தத்துவம் பூமியில் விளங்குகிறது.

அறிவு மயமானதும், இரண்டற்றதும், மாசற்றதும், உடலற்றதுமான பரம்பொருளுக்கு, பக்தர்களின் வழிபாட்டிற்காக வடிவம் கற்பிக்கப்பட்டது. எப்படி ஒரு ஆலின் விதையில் ஆலமரம் உறைகிறதோ, அப்படி 'ராம' எனும் பிஜத்தில் இந்த சராசரப் பிரபஞ்சம் உறைகிறது. அவதரித்த ஸ்ரீ ராமர், சந்திரன் நிலவுடன் கூடிப் பிரகாசிப்பது போல பிரகிருதியாகிய ஸீதையுடன் கூடிப் பிரகாசிக்கிறார்.

ஸ்ரீ ராமரை ஆறுகோண மத்தியில் தியானம் செய்யவேண்டும். முதல் கோணத்தில், பரதர், சுக்ரீவர் முதலானவர்கள் சூழப்பட்டு அவர் உள்ளார். இரண்டாவதாக வாசுதேவர் ஸங்கர்ஷனர், பிரத்யும்னர், அநிருத்தர் முதலா

னோர்கள் சூழப்பட்டுள்ளார். மூன்றாவதாக, ஹனுமான், அங்கதன், ஸுமந்திரர் முதலானவர்களுடன் இருப்பவராக உள்ளார். நான்காவதாக, இந்திரன், அக்கினி, யமன், நிர்ருதன், வருணன், வாயு, குபேரன், ஈசானன் சந்திரன், அனந்தன் முதலிய பத்து திக்பாலகர்களுடன் வீற்றிருக்கிறார். ஐந்தாவதாக திக் பாலகர்களின் ஆயுதங்களுடன் இருக்கிறார். ஆறாவதாக நீலன் முதலிய வானரர்களாலும், வஸிஷ்டர், வாமதேவர் முதலிய முனிவர்களால் வணங்கப் பட்டவராகவும் உள்ளார். சச்சிதானந்த வடிவினரான இந்த ராமரைத் தியானிப்பவர் மோக்ஷம் அடைவார்.

## 56. ஸ்ரீ ராமோத்தர தாபின்யுபநிஷத்

இது ரிக் வேதத்தைச் சேர்ந்தது. முந்திய உபநிஷத்தும் இதுவும் சேர்ந்து ஸ்ரீ ராமதாபின்யுபநிஷத் என்ற பெயரில் ஒரே உபநிஷத்தாகக் கணக்கிடப்படுகிறது.

காசியில் பரமசிவன் ராம மந்திரஜபம் செய்தார். பிரசன்னரான ராமர் கூறினார். ''இங்கே இந்த மந்திரத்தை பக்தியுடன் ஜபிப்பவனை நான் பிரம்மஹத்தி முதலிய பாவங்களிலிருந்து விடுவிப்பேன். உம்மிடமிருந்தோ பிரம்மாவிடமிருந்தோ, 'ராம் ராமாய நம' என்ற ஆறெழுத்து மந்திரத்தைப் பெறுபவர்கள் முக்தி அடைகிறார்கள். சாகும் தருவாயில் இந்த மந்திரத்தை வலது காதில் ஓதினால் அவர்கள் முக்தியடைவார்கள்.

பிறகு ஸ்ரீ ராமரைக் குறித்து பிரம்மா ஜபம் செய்த 47 மந்திரங்களை உபநிஷத் கொடுக்கிறது. பிரம்ம நாட்ட

முடையவன் இந்த 47 மந்திரங்களால் ராமரை தினம் துதித்தால் அவன் ராமரை நேரில் கண்டு முக்தி அடைவான்.

## 57. வாஸுதேவோபநிஷத்

இது ஸாம வேதத்தைச் சேர்ந்தது. வாஸுதேவர் நாரதருக்கு ஊர்த்வ புண்ட்ர விதியை உபதேசித்தார். ஊர்த்வம் என்றால் 'மேல் நோக்கி' என்று பொருள். 'புண்ட்ரம்' என்றால் சந்தனம் முதலியவைகளால் நெற்றியில் அணியும் மத சம்பந்தமான கோடு என்று பொருள்.

பிரம்மசாரியோ, இல்லறத்திலுள்ளவனோ நெற்றி முதலிய பன்னிரண்டு இடங்களில், என்னைத் துதித்து, மோதிர விரலால், விஷ்ணு காயத்ரியையோ கேசவன் முதலிய நாமங்களையோ உச்சரித்து, இட்டுக் கொள்ள வேண்டும். ஸந்நியாஸி ஆள்காட்டி விரலால் தலை, நெற்றி, இதயம் ஆகிய இடங்களில் பிரணவத்தை உச்சரித்து இட்டுக் கொள்ள வேண்டும்.

ஆத்மாவிற்கு ஊர்த்வ புண்ட்ரங்கள் அகாரம், உகாரம், மகாரம் என்று மூன்று. ஊர்த்வ புண்ட்ரங்களான இவை பிரணவ மயம், ஓம்கார மயம்; அந்த ஒன்றே பலவாயிற்று. ஓங்காரா திகாரீ மேலே அழைத்துச் செல்வாள். ஆகையால் ஊர்த்வ புண்ட்ரம் அணிய வேண்டும்.

(ஊர்த்வ) மேல் நோக்கிய தண்டம். மேல் நோக்கிய வீரியம், மேல் நோக்கிய புண்ட்ரம், மேல் நோக்கிய யோகம் ஆகிய இந்த நான்கு ஊர்த்வங்களைக் கை கொண்ட ஸந்நியாஸி பரமபதத்தை அடைவான்.

# 58. முத்கலோபநிஷத்

இது ரிக் வேதத்தைச் சேர்ந்தது. இந்த உபநிஷத் இப்பெயர் பெற்றதற்குக் காரணத்தைக் கூறவில்லை. முத்கலர் என்ற பிரசித்தி பெற்ற வேதகால ரிஷி ஒருவர் இருந்தார். ரிக்வேதத்தில் அவரைப் பற்றிய சுவையான ஸூக்தம் ஒன்று உளது (ரி.வே.X.102) இந்த உபநிஷத் அவர் உபதேசித்ததாக இருக்கலாம்.

புருஷ ஸூக்தத்தில் கூறப்பட்ட மஹா புருஷன், தன்னை நான்காகப் பிரித்து, மூன்று பாதங்களை பரமாகாசத்தில் வைத்து, நான்காவதான அநிருத்த நாராயணன் என்ற அம்சத்தால் உலகமனைத்துமானார். அவர் உலகப் படைப்பிற்காகப் பிரம்மாவைத் தோற்றுவித்தார். ஆனால் பிரம்மா படைக்கும் முறையை உணரவில்லை. அநிருத்த நாராயணர் பிரம்மாவிற்குப் படைக்கும் முறையை உபதேசித்தார்.

'பிரம்மனே! உம்முடைய புலன்களையே வேள்வி புரிபவர்களாகத் தியானம் செய்யவும். உம்முடைய உடலை ஹவிஸ்ஸாகவும், அதை ஏற்றுக் கொள்ளுபவனாக என்னையும் தியானம் செய்யும். வஸந்தகாலத்தை நெய்யாகவும், வெய்யில் காலத்தை ஸமித்தாகவும், சரத் காலத்தை ரஸமாகவும் தியானித்து ஞானாக்கினியில் ஹோமம் செய்து, உமது உறுப்புகளைத் தொடவும். இந்த வேள்வியால் எல்லா ஜீவ ராசிகளையும் படைக்கலாம். (இது தான் உலகின் முதல் வேள்வி. பசுக்கள் இல்லாததால் நெய் இல்லை. மரமில்லாததால் ஸமித் இல்லை. நெல் இல்லாததால் ஹவிஸ் இல்லை. இயற்கையே வேள்விப் பொருள்களாக ஆயிற்று.)

எவரெவர் எப்படியெல்லாம் வழிபடுகிறார்களோ அப்படியெல்லாம் அந்தப் புருஷோத்தமர் வடிவமேற்கிறார். புத்திசாலி தானே பரப்பிரம்மம் என்று கருதி, அவ்வாறே யாகிறான்.

## 59. சாண்டில்யோபநிஷத்

இது அதர்வ வேதத்தைச் சேர்ந்தது. அதர்வணர் சாண்டில்யருக்கு அஷ்டாங்க யோகத்தை விளக்குகிறார். இதற்கு எட்டு அங்கங்கள் அல்லது பிரிவுகள் உள்ளன. அவை யமம், நியமம், ஆஸனம், பிராணாயாமம், பிரத்யாஹாரம், தாரணை, தியானம், ஸமாதி ஆகியவை.

அஹிம்ஸை, வாய்மை, பிரம்மசரியம், உண்டி சுருங்குதல் முதலியன யமம். தவம், தானம், பூஜை, ஜபம், விரதங்களைக் கடைப்பிடிப்பது முதலியன நியமம். ஆஸனங்களில் பத்மாஸனம் முதலிய எட்டு முக்கியமானவை. யம, நியமங்களுடன் கூடிய புருஷன், விதிமுறைகளின்படி, மூச்சை உள்ளே இழுத்து, அடக்கி, வெளியே விடுவது பிராணாயாமம்.

வெளி விஷயங்களில் ஈடுபடும் புலன்களை பலாத்காரமாக உள்முகப்படுத்துதல் பிரத்யாஹாரம். வேதத்தில் விதிக்கப்பட்ட நித்ய சடங்குகளைப் பயனைக் கருதாமல் புரிதல் பிரத்யாஹாரம். எதெதைப் பார்த்தாலும் அதெல்லாம் ஆத்மா என்று கருதுதல் பிரத்யாஹாரம். உடம்பின் பதினெட்டு மர்ம ஸ்தானங்களில் மனதை நிறுத்துதல் பிரத்யாஹாரம்.

ஆத்மாவில் மனதை நிறுத்துதல், தஹராகாசத்தில் (இதயத்தில்) வெளி ஆகாசம் அடங்கியதாகச் சிந்தித்தல்; பூமியில் பிரம்மா, நீரில் விஷ்ணு, அக்கினியில் ருத்திரன்; வாயுவில் மஹேசுவரன்; ஆகாசத்தில் ஸதாசிவன் என்ற பஞ்சமூர்த்தித் தியானம் என்றபடி தாரணை மூவகைத்து.

தியானம் ஸகுணம், நிர்க்குணம் என்று இருவகைப் படும். ஜீவாத்மா பரமாத்மாவில் அடங்கிய நிலை ஸமாதி யாகும். அது அறிவு, அறிபவன், அறியப்படுவது என்ற மூன்று வேறுபாடுகளும் அற்றது. சுத்த சைதன்ய வடிவான பரமானந்த நிலை.

பிரத்யாஹாரத்தைக் குறித்துத் திருமூலர் பாடுகிறார்.

**கண்டுகண்டு உள்ளே கருத்து உறவாங்கிடில்**
**கொண்டுகொண்டு உள்ளே குணம்பல காணலாம்**
**பண்டு உகந்து எங்கும் பழமறை தேடியை**
**இன்றுகண்டு இங்கே இருக்கலும் ஆமே.**

(திருமந்திரம் 578)

**பொருள்:** வெளியே செல்லும் இயல்புடைய மனத்தை உள்ளே பொருந்தும்படி செய்து விட்டால், அக்காட்சியால் சிறிது சிறிதாய் இருள் நீங்கி ஒளி பெறலாம். முன்பு விரும்பி எங்கும் பழைய மறைகளால் தேடப்பெற்ற பரம்பொருளை, எடுத்த உடலில், உள்ளே கண்டு மகிழ்ந்து இருக்க முடியும்.

சாண்டில்யர் கேட்டபடி அதர்வணர் அவருக்குப் பிரம்மத்தைப் பற்றிக் கூறினார். பிரம்மம் மெய்ப்பொருள். அறிவு மயம், முடிவற்றது. இவ்வுலகனைத்தும் அதில் குறுக்கும் நெடுக்குமாகக் கோக்கப்பட்டுள்ளது. இவ்வுலகெலாம்

அதிலேயே நிலையுடையதாகி, முடிவில் அதிலேயே மறைகிறது. அதை அறிந்தால் எல்லாம் அறியப்பட்டதா கிறது. அதற்குக் கை, கால், கண், காது, உடல் ஏதும் இல்லை. மனதுடன் கூடிய வாக்கு அதை எட்ட முடியாது. ஞானத்தால் மட்டுமே அடையக் கூடியது. ஆகாயத்தைப் போல எங்கும் பரவியது. அது தான் நீ. அந்த ஞானத்தால் அதை உணர்ந்து கொள். அவன் யோகாப் பியாஸத்தால் தான் அடைதற்குரியவன். உலகைப் படைத்துக் காத்து, அனுபவித்து, ஆத்மாவாய் விளங்குபவன். அவனைத் தன்னிடமே காண வேண்டும். உலகையும் காண வேண்டும். ஆத்மஞானி துன்பத்தின் முடிவை அடைகிறான்.

மாணிக்கவாசகர் பாடுகிறார்:

**ஆக்கம் அளவு இறுதி இல்லாய் அனைத்து உலகும்**
**ஆக்குவாய், காப்பாய், அழிப்பாய், அருள்தருவாய்**

*- திருவாசகம்: சிவபுராணம் 1/41-42.*

**பொருள்:** தோற்றமும், வண்ணமும், முடிவும் இல்லாத நீ அண்டங்களை உண்டு பண்ணுவாய், நிலைத்திருக்கச் செய்வாய். துடைத்திடுவாய். அதற்கிடையில் ஜீவர்களை உன் மயமாக்குவாய்.

அதர்வணர் சாண்டில்யருக்கு அது ஏன், பிரம்மம் எனப்படுகிறது என்று விளக்குகிறார். அது அனைத்திலும் பெரியதாகவும் (ப்ருஹதி) அனைத்துள்ளும் நிறைந்திருப்ப தாலும் (ப்ருஹ்மயதி) பிரம்மம் எனப்படுகிறது. எதனால் ஆத்மா எனப்படுகிறது? அனைத்தையும் அடைவதாலும் (ஆப்னோதி), அனைத்தையும் கவர்வதாலும் (ஆதத்தே),

அனைத்தையும் உண்பதாலும் (அத்தி), ஆத்மா எனப்படு கிறது. எதனால் மஹேச்வரன் எனப்படுகிறது? ஆள்பவர் களுக்கும் மேலாக ஆள்பவராதலால் மஹேச்வரன்.

ஞானமார்க்கத்தால் பரம்பொருளை அதுவே தான் என்று வழிபடுகிறவன், பிரம்மத்தை அறிகிறான். சிவவடி வினரும், திருநீறு பூசியவரும், ஜடாமுடி அணிந்தவரும் உலக குருவும், தேவ தேவருமாகிய தத்தாத்திரேயரை வழிபடுபவர்கள் எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுபட்டு, உயர் பதவியை அடைவர்.





## இந்த நூலில்



